கணபதிதுணை.

காத்தான் என்கிற

இயற்பெயருடைய

# வருணகுலாதித்தன்மடல்.

இஃது

சரவணப்பெருமாளையர் அவர்களால்

அச்சிட்ட பிரதிக்கிணங்க,



மதுரை,

தம்புசாமிநாயுடு அவர்கள் குமாரர்

குப்புசாமிநாயுடு அவர்களால்

பரிசோதித்து,

ஆ - சுப்பராயமுதலியார் குமாரர்

எதிராஜமுதலியாரவர்களால்

தமது

சென்னை கூ:

பிரின்ஸ் ஆவ் வேல்ஸ் அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விஜய - ஸூ புரட்டாசிமீ

1894

உ

கணபதிதுணை.

## காத்தான்என்கிற

இயற்பெயருடைய

# வருணகுலாதித்தன் மடல்.

(விநாயகர் துதி.)

பின்முடுகு வெண்பா.

மாதுபுணர் காத்தான் வருணகுலா தித்தனைச்சென்
றோது தமிழா முலாமடற்குச்—சூதுநிகர்
சந்தமுலைச் சந்த்ர நுதற் சங்கரிபுத் ரன்கருணைக்
கந்தமதத் தந்திமுகன் காப்பு.

(முருகர் துதி.)

எங்குமுள்ள வர்ணனைக ளெல்லா மெடுத்தாய்ந்து
மங்கையர்கள் சிங்காரம் வாழ்த்தியே—எங்கள்
வருணகுலா தித்தன் மடல்பாடு தற்குக்
கருணைபொழி யாறுமுகன் காப்பு.

(பாட்டுடைத் தலைவன் சிறப்பு.)

கருணைமுகிலானகொடைக் காத்தன்றென்னுகை
வருணகுலாதித்தன் மகிழ்ந்தால்—அருணமலர்ச்
செங்கையெங்குஞ்சங்குதங்குந் திங்கள்பொங்குங்கங்குன்மங்குங்
கொங்கையெங்குங்குங்குமந்தங் கும்.

(மாதின் சிறப்பு.)

நீர்கொண்டமேக நிறங்கொண்டமேனியான்
பார்கொண்டபாதப் பரந்தாமன் - சீர்கொண்ட ௧

உம்பருக்குமாலெழுப்பி யோங்குநெடுமேத்தாகச்
செம்பொற்கிரியைத் திரித்ததுவும் - அம்பரத்து ௨

வீசுமதிநுணுக மேனிமெலிவித்ததுவும்
வாசுகியைநாணு வருத்தியதும் - ஓசையலை
தன்னைக்கடைந்ததுவுந் தண்ணமுதத்தோடுதித்த
மின்னைத்தழுவியது மெண்ணாமல் - பன்னித்

திரம்பேசுங்கோவலர்பாற் சென்றுபதினாறு
யிரம்பேர்மணம்புணர்ந்தா னென்றும் - பெருங்கனக
வல்லார்க்குங்கொங்கை மடவார்முதலாய
எல்லார்க்குமாலாயினா னென்றும் - சல்லாப

சிந்தைதனைமற்றோர்பாற் செல்லாவசீகரிக்க
வந்துலகினுற்பவித்த மாமாது - அந்தரத்தில்
ஓதினியமின்போ லொளியாமலெப்பொழுதும்
மேதினியிற்சஞ்சரிக்கு மின்கொழுந்து-பூதலத்தில்

பைந்தொடியார்கோலம் பகல்விளக்குப்போலாக
வந்தவொருநந்தா மணிவிளக்குச் - சந்தப்
படிவமெடுத்த பசுந்தோகையோகைப்
பிடிநடையன்னத்தின் பேடை - அடிதுவக்கித்

தங்குங்கொழுந்தென்று தள்ளாமலோரிடம்போல்
எங்குந்தித்திக்கு மிளங்கரும்பு - பொங்குவெயில்
கண்டுமுகங்கருகாக் கண்டுண்ணத்தாதுதிரா
வண்டுதுவையா மதுமாலை - அண்டர்பால்

சோராக்கலைகுறையாச் சுற்றுமுயற்களங்கம்
சேராமறையாச் செழுந்திங்கள் - ஆராயும்
மைத்தவமுந்தென்பான் மலயமலையிற்பிறவாச்
சித்தசனேறுஞ் சிறுதென்றல் - வைத்த

உலைபுகாக்காயா வுருகாதிருக்குந்
துலைபுகாமாற்றுணாயாச் சொர்ணம் - அலைகடல்சூழ்

வெம்பூவின்முப்பூ விளைநிலத்தின்விறடங்க
ஐம்பூவிளையு மமிர்தநிலம் - கெம்பீரத் ௧௬

தார்க்குமெவர்க்கு மருந்தாதிருந்தாலும்
பார்க்கமயக்கும் பசுந்தேறல் - போர்க்குறிய ௧௭

காமனுக்குவஜ்ராங்கி காமனுக்குநிக்ஷேபம்
காமனுக்குமோகக் கருகூலம் - காமனுக்கு ௧௮

மூதண்டலோக முழுதுஞ்செங்கோனடத்தும்
கோதண்டதீக்ஷா குருபீடம் - மாதவரும் ௧௯

நற்றவருநிதிய நாடோறுநன்றென்று
கற்றகவியின்பக் கலைஞானம் - வெற்றிமதன் ௨௦

மீதிட்டகாமநூல் வித்தைக்கடங்காமல்
வாதிட்டபஞ்ச வர்ணக்கிள்ளை - ஆதித்தன் ௨௧

பொங்குகதிர்காணாத பூங்குமுதங்கங்குலையும்
திங்களையுங்காணாச் செழுங்கமலம் - எங்குநில ௨௨

வாகநகைக்குமரம்பையரின் மேனகைக்கும்
கோகநகைக்குங் குலதெய்வம் - பாகுமொழிப் ௨௩

பண்ணுநடையும் பழகுமொருசித்திரம்போல்
நண்ணுமதன ரசகுளிகை - வண்ண ௨௪

கெடியதருவிற்படரா நீள்வல்லிதாவிக்
கொடிபடராக்கற்பகப்பூங் கொம்பு - வடிவுமிகு ௨௫

பெண்ணுருவமாகப் பிரவாளங்கிளைத்தமுதல்
மண்ணுலகங்காக்க வருமமிர்தம் - எண்ணும் ௨௬

சிறப்பிக்கமாதவத்தோர் செய்தவங்களெல்லாம்
துறப்பிக்கவந்தபெருஞ் சூழ்ச்சி-நிறைத்துப் ௨௭

பெருகியுவட்டெடுத்த பேரின்பவெள்ளம்
பருகிற்றெவிட்டாப் பசுந்தேன் - ஒருவருக்கும் ௨௮

பூணக்கிடையாத பொன்னூரந்தூரத்தே
காணப்பரிமளிக்குங் கஸ்தூரி - நீணிலத்தில் உசு
கொல்லாக்கொடுங்கூற்றங் கூவாமற்கொஞ்சுகுயில்
எல்லாக்கலைக்கு மினியமான் - உல்லாசத் ௩0

(அடி.)

தேமேவனிச்சச் செழும்போதெனுமினிய
பூமேனடக்கப் பொறுமலோ - மாமோகத் ௩க
தந்தமதனூல்கொண் டமிர்தநிலையாராயும்
மைந்தரதிமதுர வாய்பட்டோ - முந்துகணைச் ௩உ
செங்கைச்சிலைவேள் திருமுடியின்மேல்வைத்தோ
மங்கையர்தங்கையால் வருடியோ - பங்கமுற ௩௩
வாட்டியவானோனை வசீகரிக்கச்செம்பஞ்சு
தீட்டியோகோலஞ் சிவந்ததென - நாட்டம் ௩௪
திகழவகஞ்சிவந்து செம்பவளக்கொம்பும்
பகருமெழிலிந்த்ராணி பந்தும் - புகழிளைஞர் ௩௫
மெத்துமதிசோர்வதற்கு விண்மதிபோதாதென்று
சித்தசன்றானாய்ந்து செய்தமதி - பத்தும் ௩சு
பெரிதுவிஜயம் பெறுமதனராஜன்
சரிதநிறைபுஸ்தகமுந் தாங்கிப் - பரவியே ௩எ
ஆதிப்பிரம னனத்தைத்திருத்திநடை
சாதிப்பிக்குங்கமலத் தாளினாள் - மேதினியில் ௩அ

(பாடு.)

நாளைமடல்விரியு நாளிகேரத்தினிளம்
பாளைவிரியாப் பசுங்குரும்பை - நாளும் ௩கூ
அவங்கள்புரியா தருந்தறவோர்செய்யும்
தவங்கனிறுக்குந் தராசு - நவங்கொள் ௪0

இரண்டுநிகராகி யெல்லோர்க்குமின்பம்
திரண்டவெனவழகுசிந்தி - மருண்டமதன் ௪௧
வேதசாரங்குமுறு மின்னூபுரத்துடனே
பாதசாலஞ்சூழ் பரட்டினாள் - ஆதரவின் ௪௨

(கணைக்கால்.)

ஆட்சிமதராஜவிரு தத்தனையுமூதாமல்
காட்சியிலேபோதிக்குங் காளம்போல் - மாட்சியிணை
மீதார்விழிக்கயலின் மேற்பாயச்சூதொட்டி
வாதாகிநிற்கும் வராலிணைபோல் - ஊதுகுயிற் ௪௪
காளமதன்முதுகு காட்டாமன்மாட்சிபெறத்
தோளதனிற்கட்டுகின்ற தூணிபோல் - வேளின் ௪௫
பெருத்தகணைக்காலேந்தும் பின்னிடவேமைந்தர்
கருத்தைவருத்துங் கணைக்காலாள் - ஒருத்தி ௪௬

(முழந்தாள்.)

அமையுமிலங்காபுரியி லன்றுசென்றதூதர்
தமையுமருட்டு முழந்தாளாள் - அமுதுபயில் ௪௭

(துடை,)

அங்கவனுராக வதிமோகசாகரத்தைச்
செங்கையுறநீந்துகைக்காந் தெப்பமோ - இங்கிதமாய்
மட்டுப்படாவிளைஞர் வாஞ்சைமதயானை
கட்டுப்படுமிரண்டு கம்பமோ - தொட்டுமயல் ௪௮
நாட்டுகலவிக்கினிய நாடகசாலைக்கழகு
சூட்டுமணிமுகப்பின் றூண்களோ - கோட்டிபத்தின்
சுத்தத்துதிக்கையோ சொல்லுவமையென்றுலகோர்
சித்தத்துதிக்கை சிறப்பித்து - மெய்த்திமிர ௫௧

வாரணவேளோலக்க மால்வசந்தமண்டபஞ்சேர்
தோரணவாழைத்துடையினுள் - தாரணியில் ருஉ

(அல்குல்.)

ஆலிக்குவில்வே ளமளியிலேயிவ்வுலகில்
பாலிக்குமிந்த்ர பதமென்னச் - சீலிக்கும் ருங
புந்திக்குமாலுதவும் போர்மாரன்பொக்ஷமென
வந்திக்கும்பொன்னுல வட்டமெனச் - சிந்தித்துச் ருச
சூழுமணித்தாங்கித் துலங்குகுறங்காமிரண்டு
வாழையிடைச்செந்தேனை வைத்ததென - வேழமதன்
காமித்ததென்றல் கரக்கினுறக்காரிகையார்
சேமித்தலங்கரித்த தேரென்னப் - பூமிக்குள் ருசு
வண்மைமதனூலொழிய மற்றுளநூல்பொய்யெனவே
உண்மைவிளக்கு முருவமாய்த் - திண்மையுனை ருஎ
மாரனரசொழிய மற்றோரரசிலையென்
றாரமயல்பூட்டு மரசிலையாய் - ஈரம் ருஅ
தயங்கியமிர்தந் ததும்பியிதமுற்று
வயங்குபொறிப் பைந்நாகமாகி - நயங்குலவி ருகூ
ஓசைமணிமேகலையி னுட்கலையினென்றும்
ஆசைபரிமளிக்கு மல்குலாள் - ஈசர் சூO

(இடை.)

றுடியாய்ப்பிடியாய்ச் சுருதியாய்வல்லிக்
கொடியாயிளவஞ்சிக் கொம்பாய் - வடிவடங்கப் சூக
பண்ணிச்சமைத்தவயன் பாதாதிகேசமெல்லாம்
கண்ணச்சிலென்றே கருத்ததென - வண்ணமலர்த் சூஉ
தேமருவுமல்குலெனுந் தென்றற்செழுந்தேரில்
மாமதனனின்ற வடிவமென - நாமருவு சூங

மாதுவிளையாடுமூது வாய்ப்புலவர்சொற்பயன்போல்
ஈதுதெரியுந்தெரியா தென்னலாய் - மூதறிவிற் சுசு
பண்டைமொழியிற்குறித்த பாதகரோபோலெவரும்
கண்டிலலையென்னு முனைக்கிசைந்து - மண்டலத்தில்
மாத்தானைக்காத்தான் வருணகுலாதித்தனைச்சென்
றேத்தார்போற்றேய்ந்த விடையினுள் - நீத்துச் சுரு
(உந்தி.)
செழித்துவாழில்லறத்தைத் தீதென்பார்நெஞ்சைச்
சுழித்துவாங்குந்திச் சுழியாள் - விழித்தெதிரோ சுஎ
(வயிற்றுமயிரொழுங்கு.)
உற்றமால்பூட்டு முதரவடபத்திரத்தில்
கொற்றமால்பள்ளிகொண்ட கோலமோ-வெற்றிமதன்
செங்கைச்சிலைநாணோ செங்கோலோகொங்கையெனுந்
துங்கக்களிற்றின் றுதிக்கையோ - குங்குமஞ்சேர் சுகூ
பொற்புமுலையாமிரட்டைப் புண்டரிகப்போதரும்பி
நற்புதுமைகாட்டு மொருநாளமோ - அற்புதவேள் எ0
ஆர்க்குந்திருநாளுக் கல்குற்றேர்பின்னோட்டம்
பார்க்கப்பிணித்த பணிவடமோ - நீர்க்குமிழி எக
ஏந்துமிருகொங்கை யிளநீர்கலந்தணிந்த
சாந்துபுழுகொழுகுந் தாரையோ - மாந்தர்மருள் எஉ
உச்சாயமாமிடைக்கு மோங்குபயமாமுலைக்கும்
அச்சாய்நிறுத்தியநா ராசமோ - கச்சாரம் எங
வன்னஞ்சிறந்தமுலை மால்வரையின்மாதவத்தோர்
தந்நெஞ்சையேற்றுமொரு சாரமோ - கன்னிப் எசு
புளகவபிராமப் பொருவருகெம்பீரக்
களபமுலைச்செவ்விளநீர்க் காம்போ - வளமையினல் ()

எண்ணிரண்டுகொங்கைக் கிடைவெளியைநோக்குகின்ற
கண்ணிரண்டின்பத்திக்கதிரொழுங்கே - எண்ணிஎண் [ணிப்
பார்க்கும்பொழுதிற் பலகோடிசொல்லுவமைக்
கேற்குஞ்சிறுரோம ரேகையாள் - நீர்க்கயத்துச் எ

(முலை.)

சீதவனசத்தரும்பைச் செப்பலாமவ்வரும்பு
ஆதவனைக்கண்டா லலருமே - சூதாடு எ
வட்டென்றுவமை மதிக்கலாம்வட்டதனை
வெட்டென்றுசொல்ல விதியுண்டே - நெட்டுடலச் எக

சக்ரவாகத்தைச் சரியுரைக்கலாமதுவும்
மிக்கசிறகுடைத்தாய் விட்டதே - க்குமெனப் அ
பாரப்பருவகலப் பச்சிளநீரென்னலாம்
ஆரப்புளகமரும்பாதே - வீரமதன் அ

வண்ணமுடியென்று மதிக்கலாமம்மகுடம்
தண்ணெனவும் வெச்செனவுந்தாராதே - பண்ணரிய ()
சித்ரமணிச்செப்பென்று செப்பலாமச்செப்பு
புத்தமிர்தபோகம் பொசியாதே - சுத்தநதிச் அ

சுந்தரஞ்சேரற்புதத்தைச் சொன்னார்பனிநீரும்
சந்தனமுங்குங்குமமுந் தாங்காதே - விந்தைசெறி அச
அந்தநறுங்கோங்கி னரும்பெனலாமவ்வரும்புக்
கிந்தமுகக்கருமை யெய்தாதே - சந்தமிகும் அ

பூரணகும்பங்களெனப் போற்றலாமக்கும்பம்
தாரணியுமொண்சுணங்குந் தாராதே - சீரணியும் அசு
மாகனகவெற்பெனலா மற்றந்தவெற்பானூர்
கோகனகக்கையாற் குனிந்ததே - வாகுசெறி அ

பந்திணைகளென்று பகரலாமப்பந்தும்
இந்துநுதலார்கைக் கிடைந்தெழுமே - கந்தமிகும் அஅ
பூங்கொத்திணையாய்ப் புகலலாம்பூங்கொத்தும்
தேங்குதென்றல் வீசச்சிதறுமே - மாங்கனியின் அகூ

பக்குவமாமென்று பகரலாமக்கனியும்
மிக்ககிளிகோதியிடின் மீறுதே - தக்கபெரு கூ0
வாகுமதயானையிரு மஸ்தகமென்றோதலாம்
பாகர்சிறுகொந்தார் பயந்ததே - ஆகையினல் கூக

மானேமுதலிந்த மண்டலத்தினேரின்றித்
தானேதனக்குச் சரியாகி - ஞானமெல்லாம் கூஉ
மொண்டெடுத்தமௌன முனிக்குரும்பெலாமடக்கத்
தண்டெடுத்துவந்த தனுமாரன் - கொண்டலெனும் ()

மட்டவிழும்பூங்கோதை மாதுரதிக்குந்தனக்கும்
இட்டவினைக்கூடாரமென்னலாம் - வட்டத் கூச
திடங்கொண்டுபூரித் திறுமாந்துமுத்து
வடங்கொண்டு மேன்மேல்வளர்ந்து - தடங்கொண்ட ()

வட்டவிருமந்தரத்தை மார்பிற்பதித்திறுகக்
கட்டுமணியாணிபோற் கண்கறுத்துக் - கிட்டரிய கூகூ
பாளிதலேப படீரமுலாவுப
லாளிதமோகன ராஜசம் - மேளம கூஎ

ஞேகரகாமவி ஞேதவிகாரவ
சீகரகோமள சீதள - மாகி கூஅ
அரும்பிவிரும்பி யசைந்துதசைந்து
திரம்பிநெருங்கி நெகிழ்ந்து - பரந்து கூகூ

சுணங்குநிறைந்து சுகந்தகதம்ப றும்
மணங்குடிகொண்டுவயங்கி - இணங்கி க00

அருந்தவர்சிந்தை யடங்கிமடங்கி
வருந்தநெருங்கி வளர்ந்து - திருந்தியொரு கo௧
தீதுங்கொள்ளாத செழுந்தாமரைமுகையின்
மோதுஞ்சிறுதிவலை மொய்த்தனபோல் - ஓதமார் கoஉ
வாழக்கடல்கடைந்த மாயோன்மணிமகுடம்
சூழத்தெரித்த சுவைத்துளிபோல் - எழுலகும் கoங
மெச்சுகலைமதியின் வெண்ணிலாவீசுமுத்தின்
கச்சுப்புனைந்த கனதனத்தாள் - இச்சையினல் கoச

(கைவிரல்.)

எத்துகின்றகாமுகர்மே லின்பவேன்முத்திரையைச்
சாத்துகின்றமுத்திரைக்கோ ருனென்னச்-சூத்திரங்கள்
டாயிலொருவ ரறியாவமிர்தநிலைக்
கோயிற்றிறக்குந்திறவு கோலென்னத் - தூயகலை கoரு
வாசிக்கும்பஞ்ச வனக்கிள்ளையின்சிவந்த
நாசிக்குநேராய் நகந்துலங்கத் - தேசுற்ற கoசு
பத்ரகரவிர பத்திரமோகோமளஞ்சேர்
சித்ரப்பருவச் சினைக்கெளிதோ - மெத்தென்று கoஅ
துய்யபவளத் துவடறுகொம்போவென்ன
வெய்யமயல்பூட்டும் விரலினள் - செய்யசெழுந் கoகூ

(உள்ளங்கை.)

தாமரையின்போதைச் சலப்படுத்திக்காந்தளெனும்
மாமலரைத்தூர வனத்தகற்றிக் - காமுகர்மேல் ககo
வெங்கடுங்கோபத்துடனே வீசிப்புடைத்தாலும்
பொங்குமூர்ப்பந் தொத்துச்சிதளமாய் - இங்கிதத்து ()
கம்பூரிக்குமுடி-துவக்கித்தாளளவும்
ஆகம்பூரிக்கு மகங்கையாள் - ஓகையிசை ககஉ

(முன்னங்கை.)

விண்டிருக்கும்யாழ்களெல்லாம் வெட்கத்திருவுருவம்
கொண்டிருக்கும்யாழினிய கோடொத்து-வண்டணிந்து
சுற்றுநவரத்நந் துலங்குகடகங்களினால்
மொய்த்தழகுமாருத முன்கையாள் - சித்ரமுலை ககச

(தோள்.)

பூரணகும்பங்களின்மேற் போட்டபெருமாலையென்ன
ஆரணிவில்வேள்பஞ் சணையென்னச் - சீரணிந்து ()
கொங்கைமலைமேலங் குரித்தெழுந்துகிழ்வளைந்த
துங்கமணிவேய்போலுந் தோளினாள் - திங்கட் ககரு

(கழுந்து.)

சுமுகமதராஜன் சுருதியிருநாவாம்
குமுகுமெனும்புள்ளோசை கொஞ்சத் - தமரிக்கும் ()
வன்னிக்கும்பாளை மடலவிழநாள்செல்லும்
கன்னிக்கமுகனைய கந்தரத்தாள் - துன்னிரவி ககஅ

(முகம்.)

வந்தால்விகசிதமாய் வண்டின்பதந்துவையாச்
செந்தாமரைபோற் றிருமுகத்தாள் - நந்தாத ககசு

(உதடு.)

மாபவளமோவிலமோ மாதளையோவேல்விழியின்
கோபவளமோயிந்த்ர கோபமோ - சேவைதரும் கஉ0
தூதளையோகிஞ்சுகமோ தொண்டையோவண்டினங்கள்
தாதளையுஞ்செங்குமுதத் தண்மலரோ - ஈதென் கஉக
றெவருமுபமான மெடுத்துரைக்கநின்மா
துவருமயங்கித் தியங்கக் - குவிபொன் கஉஉ
பொழிந்தருளுந்தென்னுகைப் பூபதியைப்போற்றும்
செழுந்தமிழ்போற்செம்மைசேர்ந்து-தொழுந்திருமால்

இன்னமொருகா லிருகைவருந்தாமல்
வன்னமதிய மழுங்காமல் - இன்னமிர்தம் கஉச
ஆனவுததி யலையாமல்வானவரும்
தானவரும்வெம்போர் சருவாமல் - நானிலமேல் கஉரு
வாசுகியுமந்தரமு மாயாமன்மாறுமல்
ஆசையமுதூறு மதரத்தாள் - வீசுகதிர் கஉசு

(நகை.)

முத்தாகித்தோகை முருந்தாகிமுல்லைமுகைக்
கொத்தாகித்தந்தக் குருத்தரும்பி - விஸ்தாரம் கஉஎ
வாய்த்தபத்மராக மணியைத்தரம்பிரித்துத் [ப்
தேய்த்தொப்பமிட்டுவைத்த சேர்வையெனக்-கோத்து
பொருசிருபவேள்சிலையிற் பூங்காவியென்ன
இருநிரையும்பூக்காவி யேறி - உருகிமனம் கஉகூ
பூணநகைக்கும் புகழ்க்கொல்லியம்பாவை
நாணநகைக்கு நகையினுள் - காணவெதிர் கங0

(சொல்.)

தீட்டிவைத்தசித்திரத்தைச் சிங்காரமோகனக்கூத்
தாட்டுகிற்குஞ்செஞ்சொ லமிர்தத்தாள்- தோட்டிலயன்

(கபோலம்.)

மண்ணுடர்விண்ணுடர் வந்தழகுபார்க்கவைத்த
கண்ணுடிபோலுங் கபோலத்தாள் - வண்ணவெழில் ()

(மூக்கு.)

கொள்ளுங்குமிழுங் குமிழ்போனிறம்படைத்தால்
எள்ளுஞ்சரியா மிதற்கென்னத் - தள்ளிச் கா ()
சுரமஞ்சரிவிடுத்த சுண்ணம்பழித்த
அருமந்தசிவகனு மஞ்சப் - பெருமணத்திற் கதகஉ

காமோதவண்டின் கணத்துக்களந்தறியா
ஆமோதவல்லபமுண் டாக்கிவைத்துப் - பூமேவு க௩௫
விற்காமன்றேரோடும் வீதியெனச்சந்ததமும்
நற்கால்வழங்குகின்ற நாசியாள் - பொற்கோதை க௩௬
தேன்போதணியுஞ் செழுங்காவிக்கண்களெனும்
மான்போய்வரவிட்ட வாயில்போல் - தாம்போதத் ()
தாவப்பொன்னூலை தரித்தால்விழிக்கூற்றம்
வாவப்பிடிக்கும் வலயம்போல் - பூவுலகெண் க௩௮
சுத்தமுழுமாணிக்கத் தோடணிந்தானீலவிழி
யத்திருபானுதிக்கு மாதவன்போல் - பத்திதரும் ()
பைந்தாளத்தோடணிந்தாற் பார்வைச்சகோரங்கள்
வந்தமுதமுண்ணு மதியம்போல் - முந்தவே க௪0
சாலவழகு ததும்பிவழிந்தொழுகும்
கோலமகரக் குழைச்செவியாள் - ஆலவடி க௪க

(கண்கள்.)

வேல்போனிறம்படைத்து வீரவாள்போலிரண்டு
சேல்போற்கயல்போற் றிசைபரந்து - மால்போலச் ()
சஞ்சரிகம்போலத் தயங்கிக்கடல்போல
நஞ்சுமமுது நயந்தருளிக் - கஞ்சமெனச் க௪௩
செங்குவளையென்னச் சிறந்தகருவிளையின்
பொங்குமலரெனவே பொற்பெய்திக் - கங்குலிபக் ()
கோலாகலவேள்கோ லைப்பஞ்சபாணமெனக்
கேலாவிரகாக் கினியெழுப்பி - மேலான க௪௫
ஏமாவடுவகிர்போற் செவ்விக்குறிபொங்கி
மாரனென்ன மதத்தோடிப் - பூமாதின் க௪௬

ஆதியரிபோ லரன்போலயன்போலச்
சோதிகறுத்துவெளுத் துச்சுவந்து - பாதகமும் கசஎ
மாயமும்பொய்மையும் வஞ்சகமுந்தஞ்சமிகு
நேயமுஞ்சூது நினைவுருக்கு - பாயமும் கசஅ

அத்திரமும்விறு மதிக்கிரமமுங்களவும்
குத்திரமும்போதக் குடிகொண்டு - நித்தமிகல் கசகூ
வாதையடர்ந்து வரிபரந்துமையெழுதிக்
காதையடைந்து கடைசிவந்தே - ஓதுகலை கருo

கற்றவரையெல்லாங் கருத்துருக்கிக்காமரசம்
உற்றவலங்கார முட்கொண்டு - சுற்றும் கருக
புவிக்குணிகரற்ற புலவோர்தஞ்செஞ்சொற்
கவிக்குநிகராகுமிரு கண்ணாள் - குவித்தமலர் கருஉ

(புருவம்.)

சூழளகக்கொண்டலுக்குஞ் சோதிநுதற்பிறைக்கும்
தாழவொளிருமிந்த்ர சாபமோ - ஆழிவரு கருங
காளமனையகல கச்சங்கிராமவிழி
வாளினுறைகழற்றி வைத்ததோ - வாள கருச

நெருங்குகடலும்புலம்ப நீலநிறப்பார்வைக்
கருங்கடலுக்கிட்ட கரையோ - பெருங்கபடக் கருரு
காமனயிலுங் கயலும்பொருநயனத்
தாமரையின்பக்கத் தரங்கமோ - மாமதனைச் கருசு

சித்திரமோகாதிசயஞ் செய்விக்குமாரனிம்ப
பத்திரமோவென்னும் படிவிளங்கிப் - புத்திநனே கருஎ
வாட்டுசிலைவீர மதவேள்மலரம்பு
பூட்டுசிலைபோலும் புருவத்தாள் - தோட்டிதழிக் கருஅ

(நேற்றி.)

கொந்தார்சடையோன் குலவுநுதற்கண்போலச்
சிந்தூரந்திட்டுந் திருநுதலாள் - அந்தரத்தில் கருசு

(கூந்தல்.)

ஓட்டமிடுந்திண்டே ருதயமார்த்தாண்டன்மேல்
கூட்டமிடுங்கங்குற் குழலான்கொலோ - நாட்டமுறத் ()
தேசுபுனைபங்கயமேற் சேர்மதுகரத்திரளோ
வீசுமுகமதிதோய் மேகமோ - ஆசைமதன் கசுக
காவணமோகொன்றைக் கருங்கனியோகாயாவின்
பூவணமோமஞ்ஞைபயில் பூங்காவோ - தாவுதமிழ் ()
கல்லார்மனமோ கலவிவிலைவாங்க
வல்லார்பொதுமகளிர் வன்னெஞ்சோ - எல்லாரும் ()
ஏதென்றதிசயிக்க விந்த்ரநீலத்தினறுந்
தாதொன்றிவாசச் சவாதணிந்து - போதொன்றி கசுச
நெய்த்துக்கடைகுழன்று நீண்டுசுருண்டடர்ந்து
மைத்துத்தகர மணம்பொதிந்து - மெய்த்துமணம் ()
சோதிக்கும்வண்டுஞ் சுரும்புமாடிப்பாடிச்
சாதிக்குநாடக சாலையோ - ஓதத் கசுசு
துனிநீரலைபோற் றுறவோரலையப்
பனிநீரால்வாசம் பரவித் - தனியே கசுஎ
வெறும்புகையுநெட்டுயிர்ப்பு மேயினோர்கொள்ள
நறும்புகையுஞ்சார்ந்து நயந்து - நிரம்புதிய கசுஅ
பைந்தளவுமல்லிகையும் பன்னீரும்பாரித்தால்
கந்தரத்திற்றூரா கணம்போன்றும் - சந்தமடற் கசுகூ
றண்காவுஞ்செங்கமலஞ் சாத்தினுன்மாயவனூர்
கண்கான்முகங்கனிவாய் கைபோன்றும் - திண்காதல் ()

கைவன்குருவேர் கலந்தால்வரியறல்சூழ்
சைவலத்தின்கொத்துத் தனைப்போன்றும்-இவ்வகையே
வேரிச்செழுமலரும் வில்வேள்கணைமலரும்
வாரிச்சொருகு மலர்க்குழலாள் - தாரணியில் கஎஉ

(வடிவு.)

சாதுரியவேதாவுந் தார்குழலாளைப்படைக்க
மாதுரியம்பார்க்கும் வடிவினாள் - ஆதரிக்கும் கஎங

(நன்மை.)

மையன்மதவேள் வளநகரிசோதனைக்கோர்
தையலுருவாகிவந்த தன்மையாள் - துய்ய கஎச

(மலை.)

தொடருமழைமேகந் தோய்தலாற்சூழப்
புடவிதனைச்சுற்றும் பொருளால்-படரும் கஎரு
தளவநகைப்பாவை தரலான்மதிக்க
அளவுபடாத வதனால் - கிளருமெழில் கஎசு
அம்புலிதோற்றத்தா லமைதருநீலப்பரப்பால்
விம்பமணிக்குன்றுபல மேவலால் - உம்பரின்மேல் ()
தேங்குவசிகரத்தாற் றிண்கோட்டுநாகமே
தாங்குதலான்மாலைத் தரிக்கையால் - ஓங்கி கஎஅ
வளங்குலவுநேமி மகராலயம்போல்
விளங்குமுனிவன் விதித்த - வளங்கொள் கஎகூ
தமிழின்சுவையெனவே தண்குறிஞ்சிச்செந்தேன்
உமிழும்பவளமலை யுள்ளோன் - கமழும் கஅ0

(நதி.)

செழுங்கடுக்கைத்தாராளன் செஞ்சடைபோன்மின்னி
முழங்கித்திசையனைத்து மூடி - ஒழுங்கிக் கஅக

கடனீர்பருகிக் ககனமுகடேறித்
திடநீடுகுன்றச் சிகரத் - தடனீடு ௧௮௨

மேகத்திரள்கால் விழுந்துபொழியமண்ணும்
மாகமுமொன்ருக வளர்வெள்ளம் - மோகமலர் ௧௮௩
மானைப்புணரும் வருணகுலாதித்தன்மகிழ்
சேனைப்பெருக்க மெனத்திகழ்ந்து - கானில் ௧௮௪

விசைகொண்டுகாலெடுத்து வீசிநடந்தோடித்
திசைகொண்டுகாம்பீரஞ் செய்து - மிசையுந்தித் ௧௮௫
தண்குறிஞ்சிவந்தடைந்து சம்பகம்பிடுங்கிவண்டு
பண்குறிஞ்சிநந்துகொந்து பந்தறைந்து-திண்குறிஞ்சி ()

சந்தனங்களைந்துமந்தி தந்திசிங்கமெண்கினங்கள்
உந்தியொன்ருேடொன்றெதிர்ந் துடைந்தமிழ்ந்த-வந்திரைந்து ()

விண்டுமெண்டுவிண்டடர்ந்து விண்டொடர்ந்தகுன்றடைந்து
கொண்டுநின்றகுங்குமங் கொணர்ந்தெழுந்து - மிண்டுகின்ற ()

தந்ததொந்தமென்றுசந்த தங்கழங்குகொண்டமைந்த
அந்தவண்டலெங்குமொண் டடர்ந்துசென்று-முந்தி ()
விளைந்தகருந்தினை செந்தினைவிஞ்சி
வளைந்தபுனங்களை மண்டி - அளைந்து ௧௯0

வருந்தமனங்குற மங்கையரொன்றி
இருந்தவிதண்க ளெறிந்து - திரம்பிய ௧௯௧
குங்கிலியமுந்திமிசுங் கொண்டோங்கிக்கேகயமும்
பைங்கிளியுமோடப் பறந்தோடித் - துங்கமுறத் ௧௯௨

தாங்குமயில்படைத்த தாடாளனைக்கரத்தில்
ஓங்குமயில்படைத்த வுத்தமனைப் - பூங்கடப்ப ௧௯௩
மாலையனைவண்டா மணிமாடபீடத்தின்
மேலயனைக்காவல் விளைத்தானைக் - கோலமதி ௧௯௪

யாறுமுகத்தானை யசுரகுலமழியத்
தூறுமுகத்தானை தொலைத்தானை - வீறுமலர் ககரு
வேரிப்பதாம்புயனை மென்குறத்திகொங்கைபடப்
பூரிப்பதாம்புயனைப் புண்ணியனைச் - சீருற்ற ககசா

கந்தனைச்சேயைக் கடவுளைச்செவ்வேளையரன்
மைந்தனைக்கண்டு மனமகிழ்ந்து - முந்தியெதிர் ககஎ
பாலைவனமேவியதி பாதகவில்வேடரணி
வேலைவடிவாளையலை மேலுதறி - ஓலமிடு ககஅ

கூபமுறைநீரினொடு கூடிவிளையாடியதி
தாபவனமேவியழல் சாடிநிறை - மாபுறவின் ககக
கூடுகளைக்காரகிலைக் கோல்முருடானகள்ளிக்
காடுகளைச்சாய்த்திருப்பைக் கானனுகி - நீடுவிறற் ()

பாராளவைப்போற் பகற்சூனையாடுவார்
போராடலெல்லாம் புறங்கண்டு - சீராகி உ௦க
அந்தரிபிங்கலை யம்பிகைசங்கரி
சுந்தரிவிந்தைச் சுமங்கலை - மந்தர உ௦உ

பாரபடீர பயோதரிபூதரி
காரணிவாமினி காமினி - தீரி உ௦ங
அமலைநிமலை யரிவைதெரிவை
கமலசரணி கவுரி - குமரி உ௦ச

வராகிகபாலி மனோன்மணிசூலி
புராணிசடாதரி பூவை - தராதலத்தோர் உ௦ரு
பன்னியடிவணங்கும் பாலைக்கிழத்தியெனுங்
கன்னிகழூவக் களிகூர்ந்து - நன்னிலமெண் உ௦சா

முல்லைபுகுந்து முருகுபெருகுநெடுங்
குல்லையணிந்து குழலேந்தி - எல்லையிற்றன் உ௦எ

மன்றலளகத்துக்கும் வாணகைக்குமொப்பென்று
கொன்றையுமுல்லையுங் கோத்தெரிந்து - வென்றி ()
திரள்புருஷனைதையர்கோன் செங்கைக்கொடைபோல்
சுரபிதனையஞ்சத் துரந்து - குரவையிலே ௨௦௯
மண்டுபொதுவியர்த மாமேகலைவாரிக்
கொண்டுநெடுமால்போற் குருந்தேறித் - தண்டலையில்
காயாமலர்நிற்கக் காரணமென்னென்றுவிழச்
சாயாமுறியர்த் தமரித்துத் - தூயமலர் ௨௧௧
வெண்படாத்தைக்களைந்துவேறுபடாஞ்சாத்துவர்போல்
தண்படாவெண்படாஞ் சாத்திப்போய் - வண்பரனூர் ()
நேரிழைவந்தாளென்று நெய்பாறயிரான
வாரியெதிர்கொள்ள வந்தவெனப் - பாரியெனும் ௨௧௩
சீரோன்வருணகுலா தித்தன்பானுகையிலே
பாரோர்விருந்தருந்தும் பந்தியெனப் - பேராயர் ௨௧௪
பாடிதனிநெய்ச்சாடி பாற்சாடிமிக்கதயிர்ச்
சாடிநிமிடங் தனிற்சாடி - ஓடிக் ௨௧௫
கடுங்கானிடைநடந்து கல்லைப்பெண்ணாக்கி
அடுங்காளவெம்ப ணியிலாடி - நெடுங்கோட்டு ௨௧௬
மாமருதஞ்சாய்த்து வணங்குவார்நெஞ்சுறைந்து
தாமமணியுஞ் சகடுதைத்து - பூமியெனும் ௨௧௭
மின்னையளந்து விளங்கித்தலைநாளிற்
றன்னையும்பெற்றவிரு தாள்வணங்கி - முன்னி ௨௧௮
மருதம்புகுந்து வனசம்புனைந்து
மருதங்களைந்து வளைந்து - கருகரிய ௨௧௯
எம்பிரான்றேவி யெழுந்தருளினளென்றே
உம்பர்கோன்வைத்த வுலுப்பையெனப் - பைம்பூகத்()

தாறுமிளநீருந் தண்கரும்புமஞ்சளிஞ்சித்
தேறுங்கருணைச் செழுங்கிழங்கும் - ஊறிரதத் உஉக
தேமாநறுங்கனியுந் திண்பலாவின்கனியும்
மாமாதளையின் வளர்கனியும் - ஆமலகப் உஉஉ
பைங்கனியும்வாழைப் பசுங்கனியும்பேரொனுமிச்
சங்கனியும்பொற்றமரத் தங்கனியும் - துங்கமலர்ச் ()
சோலைவாய்வண்டுவைத்த சுத்தப்பசுந்தேனும்
ஆலைவாய்க்கன்ன லடுபாகும் - மாலதியும் உஉச
பன்னீருமல்லிகையும் பாளையும்பாதிரியும்
மன்னுங்குவளை மதுமலரும் - இன்னவகை உஉரு
எல்லாம்பரவி யிருந்தவிடந்தோறும்
உல்லாசமாக வுலாவிவந்து - மல்லாடத் உஉசு
தூண்டுபரியேறுஞ் சுத்தவீராதிபர்போல்
பூண்டுசிலைவாளெடுத்துப் போர்தாவி - ஈண்டு உஉஎ
கரையெங்குமள்ளர் களித்தார்க்கநன்னீர்த்
திரையெங்குமன்னஞ் செறியப் - பரவியே உஉஅ
நெய்தனிலம்புகுந்து நெய்தற்றடம்படிந்து
மைதவழும்புன்னை வனஞ்சாய்த்துக் - கைதைமடல் ()
கூடிப்புளினமெலாஞ் சுற்றிப்பெரும்பனையைச்
சாடிப்புளினந் தனையோட்டி - நீடுற்ற உஙo
மாதரங்கமுந்திவலை வாணரிளம்பருவ
மாதரங்கமுந்திவலை வாய்முகந்து - தாதவிழ்ந்து உஙக
பானலம்புனைந்துவரி பாய்மரஞ்சுழன்றுவிழ
மீனினங்கள்சிந்தியலை வீசிமொண்டு - கானலெங்கும் ()
ஓடிக்கழிக்கரையி லொல்லைப்பெடைக்குருகை
மூடிச்சுழித்தலையின் மூழ்கப்போய் - நாடிக்கன் உஙஙு

டந்தவருண னடிவணங்கிக்காணிக்கை
தந்ததராளந் தனைப்புனைந்து - செந்தமிழ்க்கு ௨௩௪
மாருதசெய்கை வருணகுலாதித்தனென்று
கூருதவர்போற் குறைவுற்றுப் - பேருன ௨௩௫
சங்கந்திகழ்நாகைத் தாருவைச்சேராதவர்போல்
பங்கம்புனைந்து பயமெய்திப் - பொங்குதுழாய்த் ௨௩௬
தேம்பதுமநாபத் திருமால்போற்சங்கேந்திப்
பாம்பணையின்மேவிப் படியளந்து - மேம்படுசொல் ().

(நாடு.)

அச்சுதனூர்சங்கேந் தமலனூர்மன்மதனை
மெய்ச்சுதனைகப்படைத்த வேந்தனூர் - நச்சரவில் ()
கண்டுயில்வார்மூதண்டங்காத்தருள்வார்தேன்சொரியும்
வண்டுளவார்சீரங்க மாநகரும் - எண்டிசையோர் ௨௩௯
வந்திக்குந்தென்குடந்தை மாநகருந்தேவரெல்லாம்
சிந்திக்குமாமகஞ்சேர் தீர்த்தமும் - முந்தவே ௨௪௦
தைப்பூசமாடத் தருமென்னவெண்ணீறு
மெய்ப்பூசச்சொன்ன விடைமருதும் - எப்போதும் ()
எத்துகின்றசுந்தரனு ரோவவிருளிற்றூதாய்
ஆத்திமுடியோன்சென்ற வாரூரும் - வாய்த்த ௨௪௨
திருப்பதிகளுள்ளவெலாஞ் சேவித்துச்செந்தேன்
மருப்பதியுந்தண்டலையுள் மன்னி - விருப்பமுடன் ()
வேந்தர்கிளைதழைக்க வேதாகமந்தழைக்க
ஆய்ந்தவணிக ரறந்தழைக்க - ஏய்ந்த ௨௪௪
உழவர்குலந்தழைக்க வுண்ணமிர்தமூறும்
விழவுந்திருநாள் விழாவும் - அழகாம் ௨௪௫

மனுநெறியுஞ்செல்வமும் வண்டமிழ்பாராட்டும்
அனுதினமுந் தன்மாசனமும் - தினகரனூர் உசரு

தின்மைக்குலத்துதித்த செம்பியர்கோமான்புரக்கும்
வண்மையுடைச்சோழ வளநாடன் -. பண்மருவும் ()

(நகர்.)

பாடலுநாடக சாலையும்பைந்தொடியார்
ஆடலுஞ்சூழ்கின்ற வாலயமும் - நீடு உசஅ

பணிக்கோபுரநிரையும் பைம்பொன்மதிலும்
மணிக்கோபுரமேடை வைப்பும் - கணைக்காயர் உசகூ

கூட்டமுமுத்தமிழின் கோதாட்டுநல்விருந்தின்
தேட்டமும்பாராட்டுஞ் சீராட்டும் - கோட்டு உருo

வனசத்திரமுகப்பு மாமறையோர்க்கெல்லாம்
தினசத்திரமுதவுஞ் சீரும் - அனத்தின் உருக

குலந்தாமரைமேற் குலாவுங்குளமும்
நலந்தான்மிகுத்த நதியும் - அலர்ந்த உருஉ

அளகாபுரியு மமரேசனூரும்
பளகாகச்செல்வம் பரித்து - வளமேவும் உருங

செந்நெலும்பூகமுந் தின்கரும்புஞ்சந்தமும்
பன்னுவளநாகைப் பதியினான் - ஒன்னலரைச் உருச

(மாலை.)

சாடுகின்றவேல்வீரன் தன்மார்பனுதினமும்
சூடுகின்றவாகைத் தொடையினான் - கூடலரைப் ()

பேயுங்கழுகும் பெருவிருந்துகொண்டாடப்
பாயுங்கலனைப் பரியினான் - ஆயும் உ

(யானை.)

அருந்தமிழோர்சொற்படியே யாறுறுப்பும்பானைப்
பொருந்திமதமூன்றும் பொழிந்து - திருந்தார் உடுஎ
படைக்கலத்தூளாக்கிப் பாகனாக்காய்ந்தோடி
நடைக்குமனவேகமெனை நாடி - இடிக்கும் உடுஅ
உருமேறெனமுழங்கி யொன்பான்முழம்பெற்
றருமேகநீளை யருந்தி - வருமேரு உடுகூ
என்னவரிவண்டி னினந்தொடரக்கோபமே
மன்னுமயிரா வதத்தினன் - மன்னி உசாO

(கொடி.)

இலகுகடற்பாரி லெதிரில்லையென்றே
குலவுமகரக் கொடியான் - நிலைமைபெறும் உசாக

(முரசம்.)

ஈகைவதுவைகய மென்றேதன்முன்றிலிடை
மோகஞ்செய்மூன்று முரசினன் - நாகமதி உசாஉ

(ஆணை.)

சூடுகின்றசெய்யசடைச் சோதியாரம்பலத்துள்
ஆடுகின்றநாதர்திரு வாணையான் - நீடும் உசாங
கடலுக்கரசன் கனங்குழலார்நீட்டும்
மடலுக்கிசைந்த வடிவன் - அடலுக்குத் உசாச
தோற்றியவேல்வேந்தர் தொல்விருதெலாமிமைப்பின்
மாற்றியவிரவடி வாளினன் - ஏற்றுக் உசாரு
கொடியான்றனக்குக் குலக்கொடியைநல்கி
வடியாப்புகழ்படைத்த வள்ளல் - படியாளும் உசாசா
கோமானெனவாழ் குருகுலத்தோர்கோத்திரத்தில்
மாமாலனைய மனுதுங்கன் - பூமிது உசாஎ

மண்டலிகர்கொண்டாடு மானகுலசீலபரன்
தண்டமிழ்வல்லோர்கிளியைத் தாங்குவோன்-மண்டலத்தில் ()
தஞ்சமெனவந்தோரைத் தப்பாமலெப்பொழுதும்
அஞ்சலெனக்காக்கு மபயத்தான் - கஞ்சத் உசாகூ
திருவளருமார்பன் றிருமலைராய
வருணகுலாதித்த மகிபன் - சுரபி உஎ0
அனையதிருப்போ னவதியிடாத்தியாக
கனகவனச கரத்தான் - அனவரதம் உஎக
கோனேரிராச வருணகுலாதித்தன்
தானுபரண சயதுங்கன் - தேனூரும் உஎஉ
தாரான்கிளைதழைக்கத் தந்ததிருப்புதல்வன்
வீராக்ரனுன வேற்கரத்தான் - சீரார் உஎங
வருணகுலாதித்தனுக்கு மைந்தனெனவாழ்வு
தருமபிராமன்கனக தாரு - திருமருவும் உஎச
வள்ளலனையகொடை மங்காமற்காத்தானுக்
குள்ளதிருத்தமைய னுத்துங்கன் - தெள்ளும் உஎரு
இருமரபுந்துய்யா னியலிசைகள்வல்லான்
ஒருமொழியேசொல்லு முதாரன் - பொருசமரில் ()
வாங்குசிலைவிசையன் மார்த்தாண்டன்வாளபிமன்
ஓங்குமடன்மா வொளிருதயன் - நீங்குநெறி உஎஎ
சொல்லாதவாக்கினைக்குச் சுக்ரீவன்மூதண்ட
வில்லாளன்வெண்ணீற்று மேனியான் - சல்லாப உஎஅ
மாதரிருகண்ணு மனமுந்திறைகொள்ளும்
பூதரவீர புசத்தினன் - ஓதும் உஎகூ
தரணிபரிபாலன் சமரமுகவீரன்
கருணைபரிமளிக்குங் கண்ணன் - பரவும் உஅ0

அடுத்தவருக்காதார னன்னசத்ரசோமன்
கொடுத்துவழிகாட்டுங் குரிசில் - தொடுத்துவிடும் ()

பூந்தாமரைமுதலைம் பூவாளியுங்கரும்பும்
ஏந்தாதசெவ்வி யெழிற்காமன் - மாந்தாதா உ.அஉ

ஆருந்தரிசித் தளவேயவரவர்தம்
பாரம்பரையறியும் பண்பாளன் - தீரன் உஅ௩

அனகனபய னமலனசலன்
கனகசரண கமலன் - வினைவும் உஅச

மதுரமொழியு மரபுமினிய
சதுரவிரக சரசன் - அதுலன் உஅரு

இளமைவயதி லியலுமிசையும்
வளமைபுனையு மகிபன் - அளிகொள் உஅசா

தருமமுரிமை தகுதிமிகுதி
அருமைவரிசை யமைவு - பெருமை உஅஎ

உடையனினிய வுலகிலெவரும்
அடையவிழையு மழகன் - மடவிதழித் உஅஅ

தாமச்சடிலனம்பு சாதசரணனன்று
காமப்பயலைவென்ற காளகண்டன் - தேமுற்று உஅகூ

மாலைக்குழலிபங்கன் மானைக்கையிலணிந்த
கோலப்பரமனன்பு கூர்துங்கன் - மேவிட்ட உகூ0

கோரக்கடினகும்ப கோலத்ரிகடதுங்க
வீரச்சமரதந்தி மேலுதயன் - நேருற்ற உகூக

சற்புருஷமேருவர சர்க்குமணவாளனிறை
அற்புதசொரூபனகி லப்பிரிசன் - நற்பதுமை உகூஉ

ஒக்கவிளையாடுமவ னுத்தமகிர்பாசரிதன்
மைக்கொடைகுலாவுமொரு வச்ரதரன்-மிக்கதொரு ()

துட்டகுலகாலனொரு சொற்கபடிலாகிருபன்
வட்டவுலகாளு மகிலப்ரபலன் - கட்டளைசேர் உகூ௪
வள்ளலிருபத் திரண்டாகமாநிலத்தோர்
எள்ளரியசீமுத மெட்டாகத் - தெள்ளுதரு உகூ௫
ஆறுகச்சங்கத்தா ரைம்பதின்மராகமதி
வீறுகவந்துதித்த வேல்வீரன் - பேறும் உகூ௬
அருணனெறிசேகரத் தானச்சுதராய
வருணகுலாதித்த மகிபன் - கிரணமிகும் உகூ௭
கார்மதித்தநற்கொடையான் காதலுடனேசக்ர
பார்மதித்தநாகைப் பசுங்காவில் - ஏர்மதித்த உகூ௮

(காட்சி.)

பொன்போன்மரகதம்போற் பூமயில்போல்வானுலவு
மின்போற்றரள விளக்குப்போல் - என்போல்வார் ()
ஆருயிர்போற்றெய்வ வரம்பைபோலாவிகொளும்
சூரியன்மகளிர் சுவடுபோல் - கூறியவென் ௩00
கண்போற்கவுஸ்துவம்போற் காகோதரநாட்டில்
பெண்போலொளிரும் ப்ரவாளம்போல்-நண்போதும் ()
சித்ரமுயிர்பெற்ற செயல்போல்விசித்திரம்போல்
அஸ்த்ரமதன்செங்கோ லரசுபோல் - முத்திறமாய்த் ()
தோய்ந்ததமிழின் சுவைபோலரன்விழியால்
சாய்ந்தவரசு தழைக்கவே - ஆய்ந்துவரும் ௩0௩
ஏந்திழைபோன்முக்கனிபோ லின்னமுதபோன்மதுரம்
சாய்ந்தநறுங்குழற்கிழ் தள்ளாடி - ஏந்தும் ௩0௪
இரண்டுகுடம்போலு மிருதனத்தைத்தாங்கி
மருங்குதுவண்டு வருந்த - நெருங்கிவந்து ௩0௫

நிற்பானைக்கண்டு நெடிதுயிர்த்துத்தெய்வமே
இப்பாரில்வந்தவிவ ராரென்று - பொற்பாமென் ௱0௬

னெஞ்சங்கலங்கி நினைவழியும்வேளையினில்
கஞ்சமலரடியுங் கண்ணிணையும் - தஞ்சமென ௱0௭

அஞ்சல்புரிய வதுதாவரமாக
வஞ்சமறமகிழ்ந்து வாய்புதைத்து - விஞ்சலுறும் ௱0௮

தேனேமதன திரவியமேசெங்கமல
மானேயனுராக வல்லியே - கானேறும் ௱0௯

கொந்தளகபந்தி குலைந்தாடக்குன்றினிமிர்
சந்தளவுபாரஸ் தனமாட - உந்தியெழும் ௱௧0

வள்ளையிருதண்டின் மகரக்குழையாடப்
புள்ளிணையவேற்கண் புரண்டாட - மெள்ள ௱௧௧

மருங்குலொசிந்தாட மணிவடங்களாட
அருங்கமலமாமுகம்வேர் வாடப் - பெருங்கழங்கோ ()

டம்மனைபந்தாடி யடியேன்மருண்டாட
இம்மனையிலாடு மியலிருக்கத் - தொம்மென்று ௱௧௩

வட்டத்திற்பாடி மணியூசலாடுவீர்
இட்டத்திலேயிருக்க வெண்ணீரோ - துட்டமத ௱௧௪

னம்புமுமதுவிழி யம்புமிகப்பொருதால்
நம்புமடியேற்கேது நன்றுதலே - கொம்பிற் ௱௧௫

குயிலானெடிது கொதிக்குமதிக்கோடை
வெயிலால்வெதும்பி விடவோ - புயலார் ௱௧௬

உமதுகுழற்காவனத்தி னுற்றநிழற்கிழ்
அமையுமிடந் தந்தருளீர் - எமைமருவிக் ௱௧௭

கொங்கையானைக்கோட்டாற் குத்தாமற்சித்தசனுர்
வெங்கையானைக்கிடுதன் மேம்பாடோ-திங்கண்முகம் ()

காட்டினீர்நானுமது கண்டேன்மயல்பூட்டி
வாட்டினீரென்னை மறஞ்செய்தீர் - காட்டுக் ௩௧௯
கெறித்தநிலவாக்கினீ ரென்வசனமாயன்
குறைத்தமரமானேன் கொடியேன் - மறித்தோர் ௩௨௦
அருள்வசனங்கூறுவது மத்திப்பூவாமோ
மருள்வசனம்யான்மொழிதன் மாண்போ - பொருளை ()
மொழியீர்மொழிந்தால் வாய்முத்துதிருமோகற்
பழியீரதனு லணங்கே - செழியீர் ௩௨௨
மதனுபதேசம்பண்ணி வாழ்விப்பீரென்றன்
விதனமெலா மாறிவிடுவே - முதலாப் ௩௨௩
பணிவாருக்காசைநெடும் பாம்புவிஷங்கொண்டால்
மணிவாய்மருந்துதவ மாட்டீர் - தணியாத ௩௨௪
வல்லிரும்புங்கல்லும் வயிரமொவ்வொன்றுக்கிளகும்
புல்லிருந்துவீதி புறப்படினும் - வல்லமையால் ௩௨௫
எப்படிசொன்னாலு மிளகாதுமதுமனம்
மைப்படியுங்கூந்தன் மடந்தையே - இப்படியில் ௩௨௬
உன்னெஞ்சமென்னெஞ்சா யுற்றுநடுநடுங்கும்
என்னெஞ்சமுன்னெஞ்சா யெய்தாதோ - முன்னம் ()
உடுக்கையிழந்தவன் கைபோலவாங்கே
இடுக்கண்களைவதா நட்பென் - றெடுத்ததிரு ௩௨௮
வள்ளுவனார்சொன்னகுறள் வாராதோவந்தாக்கால்
எள்ளளவுநெஞ்ச மிரங்காதோ - கள்ளமதன் ௩௨௯
செங்கோலுமாக்கினையுஞ் செல்லுமோநீமுனிந்தால்
பைங்கோகனகமுறு பாவையே - இங்கேதான் ௩௩௦
தாதத்வஞ்சொன்னேனைத் தாங்கவோநீர்வினையிர்
ஈதத்தவிர்தவினை யின்பமோ - சீதளித்து ௩௩௧

வாசமிலாக்காரும் வணம்விளர்த்துத்தேய்பிறையும்
பூசலிலதேற்குனியாப் பொற்சிலையும் - ஆசனவும் ()
தைத்துப்பிழைக்கறியாத் தண்ணளியிலாவேலும்
வைத்தபயத்தினுறு வள்ளையும் - மொய்த்தநறை ()
கூடியமென்சிற்றிளங்கால் கொண்டறிகிலாக்குமிழும்
ஆடையமுதுதவா வாம்பலும் - வாடிக் ௩௩௪
குவிந்தலருந்தாமரையுங் கோடுமுகச்சங்கும்
அவிந்துவளைவெய்து மமையும் - சிவந்தகுறி ௩௩௫
காட்டவறியாத காந்தளுங்குங்குமச்சே
ருட்டப்புளகித் தறியாத - கோட்டானைக் ௩௩௬
கோடுமொருவழியிற் கூடாக்கரும்பாம்பும்
பாடுகருதாதவட பத்திரமும் - ஆடவர்கள் ௩௩௭
தக்கமனம்வேறுகித் தாஞ்சுழலவேகிலையாய்
நிற்கவறியாத நீர்ச்சுழியும் - விற்கோன் ௩௩௮
நிலைப்பாடுமேவாத நேரிழையுமுன்பு
செலப்பாகளையுடைய தேரும் - கொலைக்குறிய ௩௩௯
வாழையுங்காணு வளையில்விழுஞெண்டும்
தாமும்வராஹுஞ் சரிகுறையில் - வீழும் ௩௪0
தராசுமடிபட்டுத் தளர்பந்துஞ்செம்மை
இராதவியற்கூர்மத் தெழிலும் - பராமரித்தே ௩௪௧
பத்துமதியும் பலவடுவாய்க்காயாமல்
மத்தியத்தில்வந்துதவு மாந்தளிரும் - மொய்த்துமலர்
நீண்டகுழனெற்றி நெறிபுருவங்கண்காது
காண்டகையநாசிவாய் கந்தரந்தோள் - பூண்டகரம் ()
கொங்கையுரோமங் குளிருதாமுந்தியிடை
தங்குகிதம்பங்கவான் றண்முழந்தாள் - துங்கக் ௩௪௪

# வருணகுலாதித்தன் மடல்.

கணைக்கால்பரடுகுதிக் கால்புறந்தாளின்பம்
கணிக்குமெழிலுள்ளங் கால்கட்கே - இணைக்கிப் ௩௪௫
பெரியோர்களெல்லாரும் பேசுமருள்போல்
சரியோதவென்றுந் தருமோ - அரிவையே ௩௪௬

ஓடாதமானே யுரையாதசெம்பொன்னே
வாடாதபூவே மரகதமே - தேடக் ௩௪௭
கிடையாதபஞ்சவனக் கிள்ளையேகோது
படையாதபுல்லகண்ட பாகே - நடையாடும் ௩௪௮

சித்திரமேகாமன் றிரவியமேமோகநற்சு
முத்திரமேகட்டாணி முத்தமே - அஸ்திரவேள் ()
ஆகமமேவாழ்வே யரசேயதிமத்ர
போகமேயான்செய்த புண்ணியமே - மோகினியே ()

கண்ணேவிரகக் கருவிலமேயமுதப்
பெண்ணேகலவி ப்ரதாபமே - ஒண்ணுதலே ௩௫௧
கேசயமேயென்றென்று கீர்த்திப்பேன்வாழுவனு
ராகதியாகந்தந்தா லாகாதோ - வேகமதன் ௩௫௨

காவிக்கணையுங் கருப்புவில்லுநீர்தந்தால்
சேவித்துவகையன்றிச் சேரேனோ - பூவுலகில் ௩௫௩
சொன்மருவுநின்கொங்கைத் துர்க்கத்திலென்னைவைத்தால்
மன்மதனார்கொல்லவச மாவேனோ - பொன்மயில்போல் ௩௫௪

நின்றமானேநீர் நிலமேலேநின்றபதம்
கன்றினாலென்னாவி கன்றாதோ - ஒன்றியனை ௩௫௫
மாத்திரையின்ப மகிழ்ந்தெனக்குப்பாலித்தென்
கோத்திரமெல்லாமடிமை கொண்டருளீர் - பூத்திகழும்

தேனேபிறக்குஞ் செனனமெலாம்யானடிமை
தானேயென்மேற்றிருக்கண் சாத்துவீர் - மானனையீர்

காத்தானைமார்பிற் கமலாசனத்திருவைச்
சேர்த்தவருணகுலா தித்தனைச்சென் - றேத்தி ௩௫௮

மகராசனென்றுரைக்க மாட்டாதார்செல்வம்
நிகராமோவாவிபத்தி னேர்தான் - இகலாகி ௩௫௯

மோனமேபண்ணி முனிந்திருந்தால்வீணிலே
போனநாண்மீண்டுவரப் போகுதோ - தேனனையீர் ()

மாகோபமுண்டேலென் மார்மீதுந்தோண்மீதும்
ஓகோதாள்கொண்டுதைக்க வொண்ணாதோ - கோகிலத்தில் ()

மன்னுனைவைத்தாலும் வையுமினியும்மானை
என்னுனைகோபமெனக் கில்லை - மின்னனையீர் ௩௬௨

நற்றிக்கண்ணேறுகொண்ட நற்கனிவாயூறலிலே
சற்றுத்தொட்டுத்தெறித்தாற் றாழ்வாமோ - பொற்றொடியீர் ()

சேரீர்பவளத் திருவாய்மலர்ந்தொருசொல்
தாரீரொன்றன்னைத் தனிப்பாரீர் - வாரீரொன் ௩௬௪

றுள்ளமிளகி யுருகுகின்றவென்னளவில்
எள்ளளவுநெஞ்ச மிரங்காமல் - மெள்ளவே ௩௬௫

இத்தனைநேரந்தனியே யானுரைக்கும்விண்ணப்பம்
அத்தனையுங்கேட்டுங்கேளாதவர்போல்-கொத்துமலர் ()

பூட்டுசிலைமாரன் பொரநிற்கிறானென்று
காட்டுதல்போற்சற்றே கடைக்கணித்துக்-கேட்டுமிக ()

வின்முறுவல்செய்து விளையாடித்தம்மிலே
புன்முறுவல்செய்தருளிப் போயினார் - மன்மதனும் ()

வெங்காதல்பூணும் வெகுராசநடையும்
சிங்காரப்பின்னழகுஞ் சேவித்தேன்-மங்கைநல்லார் ()

மண்ணிலேதோயவடி வைத்தசுவடத்தனையும்
கண்ணிலேயொற்றியொற்றிக் காமுற்றேன் - ஒண்ணுதலாள் ()

நின்றநிலையு நெறித்தபுருவக்கடையும்
மன்றலளகஞ்செறிந்த மாலையும் - பொன்றவெனைப் ()

பார்த்தபார்வைக்குட் பசப்பும்பசுந்தோளில்
போர்த்தபோர்வைக்கடங்காப்பூண்முலையும்-சீர்த்தவளை

வாட்டுகின்றசெந்தா மரைமுகமுங்கஸ்தூரிக்
கோட்டுநுதலிற் குறுவேர்வும் - தோட்டுமலர்ப் ௩௭௩

பூங்காவில்வந்த புதுமையுமென்கண்ணைவிட்டு
நீங்காமலுள்ளறிவு நீங்கினேன் - ஒங்குதுயர் ௩௭௪

கொண்டேன்வினையேன் கொடியிடமாய்வந்தபலன்
கண்டேனிதயங் கலங்கினேன் - அண்டியெதிர் ௩௭௫

காணத்தவஞ்செய்த கண்போன்மற்றைம்பொறியும்
பேணத்தவஞ்செய்யப் பெற்றிலேன் - நாணழகு௩௭௬

குன்றினேனுண்மை குலைந்தேன்றுணையிழந்த
அன்றில்போல்வாடினே னவ்வளவில் - ஒன்றறியாப் ()

பித்தனிவனென்றெனக்கோர் பேருண்டேயாதலினால்
நித்தனிவனென்று நினைவுற்றுச் - சித்தசன்றான் ()

தண்டாநுதல்விழியாற் றான்பட்டகண்கலக்கம்
உண்டானவெல்லா முளத்தெண்ணித்-தெண்டிரைசூழ்

துங்கவுலகிற் சுரும்பையெல்லாநாணாக்கிச்
செங்கரும்பையெல்லாஞ் சிலையாக்கி - வெங்கலக ()

மாகவனத்தோடே வளருமசோகமெல்லாம்
சோகவனமாகத் துணர்பரித்துச் - சேகரித்து ௩௮௧

முல்லையெனும்பேரின் முழங்கிசையும்பூமியும்விட்
டெல்லையிற்பூவெல்லாமெடுத்தேந்தித்-தொல்லயனுக் ()

குந்திக்கமலமல ரொன்றளித்துச்செந்திருவை
வந்திக்குநாகையர்கோன் மார்பிருத்திச் - சந்திக்கும் ()

கோகநகமுள்ளவெலாங் கொய்திரதிகண்போல்வ
ஆகுமலர்மாவி னலர்பறித்து - வாகையிற்போர் ௩௮௪
ஆடிவிசயம்புனைய வம்பாக்கித்தானனந்த
கோடியுறுரூபங் கொண்டெய்தி - நீடுலகில் ௩௮௫
ஒப்புருப்பாவி யுடலந்தனைத்தனக்கோர்
அப்பருத்தூணிநிக ராக்கினான் - மெய்ப்படவே ௩௮௬
நொந்தேன்பரதவித்தே னேக்கினகாமாக்கினியால்
வெந்தேனுள்ளாவி வெதும்பினேன் - நைந்தேன் ()
விழுந்தேனயர்ந்தேன் மெலிந்தேநினைவும்
அழிந்தேன்பரவசமே யானேன் - செழுங்கபட ()
நெஞ்சிற்கருணையில்லா நிஷ்டூரியார்தம்மை
வஞ்சக்கனவில் வரக்கண்டேன் - செஞ்சிலம்பு ௩௮௯
கொண்டவிருதாண்மலரைக்கும்பிட்டேன்வெய்யோனைக்
கண்டகமலம்போற் களிகூர்ந்தேன்-தெண்டிரைசூழ் ()
நீதியுலகந்தனிலே நிக்ஷேபங்கண்டெடுத்த
ஆதுலற்போற்பேருவகை யாயினேன் - திதிநெறி ()
சேரும்வருணகுலா தித்தனையேசேர்ந்துகளி
கூருமவர்போற் குறைவற்றேன் - ஆரத்தின் ௩௯௨
வண்டலணிகொங்கைகளைவாழ்த்தினேன்மங்கைநல்லார்
கெண்டையிணைவிழியைக் கீர்த்தித்தேன் - அண்டையிலே ()
சென்றேன்பராமுகமோ தேவரீர்விண்ணப்பம்
ஒன்றேயதுகேட்க வொண்ணாதோ - இன்றுமைநான்()
சற்றேயொருவார்த்தை சம்பாஷித்துக்கொள்ளப்
பற்றேனேசொல்லீர்பனிமொழியீர்-பொற்றொடியீர் ()
எந்நேரமுமேநீ ரேவினதுகேட்டுமது
பின்னேதிரிந்து பிழையேனோ - என்னுடைய ௩௯௬

மேதகையநெஞ்சின் விழிவேல்விளைத்துவரும்
காதனிறைக்குங் களஞ்சியமே - சூதுபயில் ௩௯௭
சேவிலகுகண்ணீரோ செப்பீர்முக்கார்சமர்த்துக்
காலெளிமைவேண்டாவோ காரிகையீர் - ஏலமலர் ()
ஏரிலங்குபூங்குழலி னொன்னருமையென்பெருமை
ஆரறிவார்நீரறிவ தல்லாமல் - நீரைத் ௩௯௯
தெளித்தாலுமாறுச் செழுங்காமச்செந்தீ
அளித்தால்வலக்கார மாமோ - களிக்கும் ௪00
தவலோகருமயங்குந் தாமநகையீர்
துவலோதுவலொன்றுஞ் சொல்லீர் - நவமாம் ௪0௧
விழிபாயவேநொந்தேன் மெல்லநல்லீருந்திச்
சுழிபாய்வேனென்றுதுதி சொன்னேன் - தழுவும் ()
பொருவாள்விழியாரப் போதுமுகம்பார்த்துத்
திருவாய்மலர்ந்துநகை செய்தார் - பெரிதிங் ௪0௩
கிதுவேதருணமென வெண்ணியிடந்தேடி
மதுவேறுபூங்கா வனத்தில் - உதவியதோர் ௪0௪
வாளைமணிவசந்த மண்டபத்திற்பூங்கமுகின்
பாளைமணங்கமழும் பந்தரிட்டு - நீள ௪0௫
எடுத்துவகையா வெல்லையில்லாமாலை
தொடுத்துச்சிலபூச் சொரிந்து - விடுத்ததிலே ௪0௬
பாயல்படுத்துப் பரிமளப்பூமெத்தையின்மேல்
ஆபவிரித்ததன்மே லாங்கவரைச் - சேயபதம் ௪0௭
கன்றுமற்கொண்டேற்றிக் கைகட்டிவாய்புதைத்து
நின்றேனிருதாளை நீட்டினர் - சென்றந்தக் ௪0௮
கால்கொண்டுபற்றியிரு கையாரத்தீண்டியபினை
மேல்கொண்டுநானுமங்கு மேவினேன் - மால்கொண்ட

மைக்குழலேநீவி வகிர்ந்துவகிர்ந்ததிலே
தக்கமதுமாலையெலாஞ் சாத்தினேன் - மிக்கபனி ()
நீரிற்குழைத்த நிறக்குங்குமக்குழம்பைப்
பூரித்தகொங்கைகளிற் பூசினேன் - வேரிமல சுகக
ரிற்பூவையன்னார்க் கிதவியகாய்ச்சுண்டையுடன்
கர்ப்பூர தாம்பூலங் கைகொடுத்தேன்-அற்புதமாம் சுகஉ
பாதிச்சுருளெனக்குப் பாலித்தமிர்தநிலை
சோதிக்கலீலை தொடங்கினார் - சீதமலர் சுகங
மட்டிலேதோய்குழலார் மாமேகலைநெகிழ்த்த
மட்டிலேஎன்னை மறந்தேன்யான் - கட்டிமலர்க் சுகச
கைக்குளணைத்துக்கரணக் கட்டளைவட்டத்துறையில்
புக்கொருமித்தெட்டுவகைப்புட்குரலிட்-டொக்கவெடுத்
தப்புறமுற்றிப்புறமுற் றற்புவிளைத்துப்பரிவைச்
செப்பிரகத்திற்குறியைச் சிக்கெனவைத்-தொப்பிலெழிற் சுகரு
பற்குறியிட்டுக்கருணைப் பத்மமுகப்பொற்பொளிரப்
பொற்குவடொத்துப்புணரப் புத்தமிர்தத்- திற்குலவிச்
சற்றிளகிச்சற்றிறுகிச் சக்ரதலத்துக்குளிலக்
கற்றுமதர்த்தொத்தனக் கச்சவிழப் - பொற்பு சுகஅ
மிருத்தமுலைக்கண் விரற்கொடதுக்கி
நகத்திலுறுத்தி நகைத்து - முகத்தை சுகசு
முகத்திலமுத்தி முயக்கிமயக்கி
மிகுத்தநலத்தை விளைத்துச் - சுகத்தில் சுஉ0
அரத்தநிகர்த்த * தரத்தையெயிற்றில்
இருத்தியருத்தி யிசைத்துக் - கருத்திலிசை சுஉக

---

* அதரத்தை - இதழை.

உற்றகரணத்திலொரு வர்க்கொருவரொத்துவகை
பெற்றதிலடிக்கடி பிணக்குவர - நற்றுயிலில் ௪௨௨

மைத்திலகநெற்றிபுரு வக்கடைநெறிப்புவர
உய்த்திடுகெழுத்தொடு கையுட்புகுத - மெத்திய ௪௨௩
கொங்*தளபந்தி குலைந்துசரிந்திட
வந்துசுரும்பர வஞ்செய - முந்திய ௪௨௪

செஞ்சரணங்கள் சிலம்புபுலம்பிட
வஞ்சிமருங்குல் வளைந்திட - அஞ்சொலுடன் ௪௨௫
நெஞ்சமுமொன்றி நிரம்பியசங்கிசை
கொஞ்சவிரண்டுகை கும்பிட - விஞ்சிய ௪௨௬

ஆவியொன்றவாகமொன்ற வாசையொன்றநேசமொன்ற
மேவுபஞ்சபாணதுங்கன் வீறடங்க - வாவுமின்ப ()
மேலணிந்தபூண்மழுங்க மேனியெங்கும்வேர்வரும்ப
நீலமன்றல்வீசுமுந்தி நீர்ததும்பக் - கோலமிகும் ()

மொய்யகலமேலிட்ட முத்துவடஞ்சிதறத்
துய்யதிருமேனி துவட்சிதற - மெய்யுறநான் ௪௨௯
ஆரம்தனூலி லறிந்தறியாச்சந்தேகம்
சேரவடைவே தெளிவித்துக் - காரிகையார் ௪௩௦

தந்தவனுராக சம்போகங்கொண்டாடி
இந்த்ரபதம்பெற்றவர்போ லின்புற்றுச் - சிந்தை ()
நனைவென்றுவாட்கண் டருங்கனவைக்காம
வினையென்றறியேன் விழித்தேன் - நனைகமழும் ௪௩௨

சோலையெல்லாந்தேடினேன் சுற்றினேன்காணமல்
மாலையெல்லாங்கொண்டு வருந்தினேன் - பாலனையார் ()

---

* அளகம் என்பது - அள-எனநின்றது.

அப்போதுசென்றவடி யல்லாமற்பார்த்தளவில்
இப்போதுசென்றவடி யான்காணேன் - மெய்ப்படநான் ௪௩௪
காணவேமுந்திக் கனவென்றறிந்தக்கால்
வீணிலேயோடி விழிப்பேனே - பேணி ௪௩௫
அறிவுக்கினியா ரகலாமற்கையால்
இறுகத்தழுவி யிரேனே - நறுநுதலார் ௪௩௬
சீரமுதக்கொங்கையையென் செவ்வாயினாற்பற்றி
ஆரமுதமுண்டுபராக் காகேனே - காரிகையார் ௪௩௭
ஏயத்தனியே யெழுந்தருளவின்னமந்த
மாயத்துயிலெனக்கு வாராதோ - நேயமுடன் ௪௩௮
மெத்தெனவேநீங்கி விழித்ததுவும்பேசுவதும்
இத்தனையுமோகனவென் றியானறியேன்-சத்தியமே ()
யென்றுவருந்தி யெரியுங்கனல்வாயில்
ஒன்றுமெழுகா யுருகினேன் - மன்றலணி ௪௪0
பாயலிலேசற்றே பரிசித்தமாத்திரத்தில்
ஆயிரநாள்கூடினர்போ லாயினேன் - சேயிழையார் ()
அன்பும்பெருநலமு மந்தரங்கமும்பெருக
இன்பம்பெரிதா யிருந்ததுவும் - துன்பம் ௪௪௨
அனைத்துந்தவிர்ப்பவர்போ லாட்கொண்டதுவும்
நினைத்துநெடுமூச்செறிந்து நின்றேன் - வினைக்கலகக்
கோபமதனாலே குறையுயிருங்கொள்ளைகொள்ளும்
சாபமதனாலே தயங்கினேன் - சோபமனத் ௪௪௪
தொந்தமதியாற் றொடர்ந்துபோதாக்குறைக்கு
வந்தமதிகாய மதியழிந்தேன் - சந்ததமும் ௪௪௫
அண்டர்குறைத்தமர மானேனடல்வேழம்
உண்டவிளங்கனிபோ லுள்ளுடைந்தேன் - அண்டிவரும் ()

தீவாடையாலே தியங்கினேன்பார்மடந்தை
மாவாடையாலே மயங்கினேன் - காவில் ௪௪௭
செழுந்தென்றலூடாடச் செந்தீவடவைக்
கொழுந்தென்றலாலே குறைந்தேன் - தொழுந்தகைய
காளகண்டவாள்விழியார் கட்டுரைகேளாச்செவியிற்
காளகண்டவோசைபுகக் கன்றினேன் - மேளமிகும் ()
தந்திமருப்பென்னுந் தடமுலையார்காரளக
பந்திமழைகாணுப் பயிரானேன் - முந்தியருள் ௪௫௦
தாவிப்பொழியுமுகச் சந்த்ரோதயங்காணு
வாவிக்குமுதமல ரானேன் - பாவியேன் ௪௫௧
புண்ணனெஞ்சுதனிற் பொங்காரம்விட்டாரக்
கண்ணுலொருவனையுங் காண்கிலேன் - எண்ணில் ()
விரகாதிமோக விளைவாங்கடலின்
கரையேறுகின்றவழி காணேன் - உருகிமனம் ௧௫௩
பேராசைகொண்டேன் பிழைக்கும்பொருட்டாகச்
சோராதொருநினைவு தோன்றிற்று - நேராகக் ௧௫௪
காமமுழந்து கலங்கிவருந்தினர்க்
கேமமடலல்ல தில்லைவலி - ஆமெனவே ௧௫௫
சொன்னதிருவள்ளுவனைத் தோத்திரஞ்செய்தேன்கருத்தில்
வுன்னிமடலூர்தற் கொருமித்தேன் - வன்னநறுந் ()
தாதளவுஞ்செய்யவிதழ்த் தாமரைப்பூங்கண்ணனைக்
காதளவுந்தாவடிபோங் கண்ணனைச் - சீதமுலைச் ()
சூதானையெல்லையற்ற சூதானைவள்ளையெனுங்
காதானைசற்றுயிரங் காதானைப் - போதாகம் ௪௫௮
செய்யானைமிக்கமறஞ் செய்தானைக்காந்தளெனுங்
கையானையென்னளவிற் கைத்தானை - வெய்யமயல் ()

தந்தாரைப்பூங்குழலின் றூராரைமாலளிக்க
வந்தாரைக்கொங்கையின்மேல் வாராரை-சிந்தைவெறுங்

கல்லாரைமன்மதனால் கற்றூரைமைப்புருவ
வில்லாரையேழுலகம் விற்பாரை - நல்லபடங் சசுக

தன்னிலவர்வன்னெஞ்சந் தாஞெழியமங்கைநல்லா
ரொன்னும்படிவ மெடுத்தெழுதிப் - பின்னர் சசுஉ

சடைகட்டிவெண்ணீறு சாத்திநறும்பூளைத்
தொடைகட்டிவெள்ளெருக்குச் சூடி - உடல்கருக ()

நெஞ்சசரவன்றெரித்த நித்தனிவனென்றுமலர்ப்
பஞ்சசரவேளும் பயப்படவே - விஞ்சமுதச் சசுச

செம்பவளவாயார் திருவேளைக்காரனென
அம்பொனெடுங்காளங்க ளார்ப்பவே - கும்பமுனி ()

சொற்றகைமைமால்விளங்குந்தொல்காப்பியந்தெளிந்தே
உற்றபெரியோர்நாற்பத்தொன்பதின்மர்-நற்றமிழ்நூல்

சேரும்வருணகுலா தித்தன்செழுங்கனகத்
தாருவெனுங்கோனே ரிராசனருள் - பேரறஞ்சேர் ()

ஆஸ்தானபோசனனங்கவே ளைத்துரந்தோன்
நாத்தானிரண்டுளையா நாகரிகன் - காத்தான் சசுஅ

அருணமலர்மாது புணரச்சுதராய
வருணகுலாதித்தன் மகிழத் - தருணமயல் சசுகூ

தீர்வேன்பலர்காணத் தென்னுகைவீதியிற்சென்
றூர்வேன்பனைமா வுகந்து. சஎ0

ஆ. கண்ணி - சஎ0

வருணகுலாதித்தன்மடல் - முற்றுப்பெற்றது.

